Regd. No TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 40 காசு



**புத்துலகு**

பழைமையின் பிடியிலிருந்து மக்களை பக்குவமாக விடுவித்துப் புதுமையின் சோபிதத்தைக் காட்டிப் புத்துலகு படைக்க வேண்டும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்



**புத்தி**

மனிதனுக்கு இன்று வேண்டியது பணமோ, வீடு, வாகனமோ அல்ல; புத்தி வளர்ச்சி தான்.

-தந்தை பெரியார்

மலர்: 6 சென்னை 21 - 2 - 82 ஞாயிறு வெளியூர் 22 - 2 - 82 திங்கள் இதழ்: 123



இந்தியாவிலுள்ள இத்தாலிய தூதர் எமிலியோபாலோபாஸி, முதல்வர் புரட்சித்தலைவரை தலைமைச்செயலகத்தில் நேற்று சந்தித்துப் பேசினார்.

## உ. பி. மின் வாரியத்திற்கு ஆண்டுக்கு ரூ. 100 கோடி நட்டம்

ஆக்ரா, பிப். 21— உத்தரப்பிரதேச மின் வாரியத்திற்கு ஆண்டிற்கு 100 கோடி ரூபாய்க்கு மேல் நட்டம் ஏற்படுகிறது என்று மின் வாரிய பிரதம என்ஜினியர் எஸ். எஸ். மிஸ்ரா கூறினார்.

1990-ம் ஆண்டுவரை ஏதாவது ஒரு வகையில் நாடு முழுமையும் மின்சார வெட்டு இருக்கவே செய்யும் என்றும் அவர் கூறினார்.

அனல் மின்சார நிலையங்களின் மூலம் தான் மின்சாரத் தேவையைப் பூர்த்தி செய்யமுடியும், ஆனால் புதிய அனல் மின்சார நிலையங்களை அமைப்பதற்கோ அல்லது செயல்படும் அனல்மின்நிலையங்களை தகுந்த முறையில்பராமரிப்பதற்கோ- மாநில அரசுகளிடம் போதியநிதி வசதி இல்லை என்று மிஸ்ரா கூறினார்.

மின்வாரிய ஊழியர்களின் ஊதிய உயர்வு, நிலக்கரிஇதரஎரிபொருள்களின் விலை உயர்வு, கிராமப்புறங்களுக்கு மின்சாரம்அளித்தல்ஆகியவைகளின் காரணமாக உத்தரப்பிரதேச மின்வாரியத்திற்கு ஆண்டுக்கு 100 கோடி ரூபாய்க்கு மேல் இழப்பு ஏற்படுகிறது.

ஏழு அனல்மின்நிலையங்கள் அமைப்பதற்கு இன்னும் மத்திய அரசு அனுமதி தரவில்லை. இருக்கின்ற அனல் மின் நிலையங்களைப் பராமரிக்க மாநில அரசிடம் பணமில்லை என்றும் மிஸ்ரா கூறினார்.

தரக்குறைவான நிலக்கரியால் அனல் மின்நிலையங்களில் 15 சத விகித மின் உற்பத்தி பாதிப்புடன் இயந்திரங்களும் பழுதடைகின்றன என்று மிஸ்ரா கூறினார்.

புரட்சித்தலைவர் ஏற்பாட்டின் படி

## இலவச தங்கத் தாலி: 49 ஜோடிகளுக்கு சிறப்புத் திருமணம்

### அமைச்சர் ஆர்.எம்.வீ. நடத்திவைத்தார்

சென்னை, பிப். 21- முதல்வர் புரட்சித்தலைவர் ஏழை-எளிய மக்கள் கோவிலில் திருமணம் செய்ய வரும்போது தங்கத் தாலி வழங்கப்படவேண்டும் என்று உத்தரவிட்டுள்ளார். அதன்படி 49 ஜோடிகளுக்கு தங்கத்தாலியுடன் சிறப்புத திருமணத்தை அமைச்சர் ஆர். எம். வீ. நடத்தி வைத்தார்.

திருவேற்காடு தேவி கருமாரியம்மன்கோவிலில் 49 ஜோடிகளுக்கு அமைச்சர் ஆர். எம். வீ. திருமணத்தை நடத்தி வைத்தார். அமைச்சர் ஆர்.எம்.வி.யின்துணைவியார் திருமதி ராஜம்மாள் வீரப்பன் தங்கத்தாலியை எடுத்துத் தந்தார். மணமகன்கள் மணமகள்களின் கழுத்தில்கட்டினர்.

இந்த திருமணத்தில் ஒவ்வொரு தம்பதிக்கும் வேட்டி சேலை-சட்டை எவர்சில்வர் குடம், பித்தளை குத்துவிளக்குஎவர்சில்வர் தட்டு (2) கருமாரியம்மன் படம் மற்றும் 50 ரூபாய் மதிப்புள்ள மஞ்சள், குங்குமம், லட்டு, வெற்றிலை, பாக்கு, அரிசி போன்றவை வழங்கப்பட்டன.

மொத்தம்ரூ41,176.14 காசு இத்திருமணங்களுக்கு செலவாகியது.

சராசரி ஒரு ஜோடிக்கு ரூ807.37பைசாசெலவிடப்பட்டது. இந்த மணவிழாவில் அமைச்சர் ஆர்.எம்.வீ., அறநிலைய ஆணையர் யு. சுப்பிரமணியம், ஜே. சி. டி. பிரபாகரன் எம். எல். ஏ. திருமதி ராதா தியாகராசன், மயிலை குப்புசாமி முதலியார், சர்வேசுரவ ராவ், ராமதாசர், குரு சுந்தரராமன், சைதை துரைசாமி, காஞ்சி பன்னீர் செல்வம், மயிலை தமிழ்மணி ஆகியோர் கலந்துகொண்டு மணமக்களை வாழ்த்தினர்.

அமைச்சர் ஆர்.எம். வீயின் துணைவியார் ஒவ்வொரு தம்பதிக்கும் தலா 100 ரூபாய் அவருடைய சார்பில் பரிசாக வழங்கினார்,

அமைச்சர் ஆர்.எம்.வீ. பேசுகையில் கூறியதாவது:

கடந்த ஆண்டு முதல்வர் புரட்சித்தலைவர்



அதிக வருமானமுள்ள கோயில்கள் ஏழை-எளிய பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு தங்கள் செலவில் திருமணத்தை நடத்தி வைக்க வேண்டும் என்று உத்தரவிட்டார். கடந்த 2,3 மாதங்களில் முக்கியமானகோயில்களில் 300க்கும்மேற்பட்ட திருமணங்கள் நடத்தி வைக்கப்பட்டுள்ளன.

### மேலும் 500 திருமணங்கள்

இன்னும் 2 மாதங்களில் 500 திருமணங்கள் நடத்தப்படும்.

ஏழை எளியவர்கள் எப்படி வாழ்வில் கஷ்டப்படுகிறார்கள் என்பதை அறிந்தவர் முதல்வர் புரட்சித்தலைவர். இத்தகைய திருமணங்களை கோயில்கள் செலவில் நடத்தி வைக்கப்படவேண்டுமென்றார்.

இதுவரை இலவசத் திருமணங்கள் என்று அழைத்து வந்

(2-ம் பக்கம் பார்க்க)

# கருணாநிதியின் செல்வாக்கு அதலபாதாளத்தில் வீழ்ந்தது

## தமிழகத்தின் தனிப்பெரும் தலைவர்

# புரட்சித் தலைவரே

### முதல்பெரும் இயக்கம் கழகமே: மக்கள் வாக்கெடுப்பு முடிவு



**சென்னை, பிப். 21- தமிழக முதல்வர் புரட்சித்தலைவரின் செல்வாக்கு சென்ற ஆண்டைக் காட்டிலும் இந்த ஆண்டு மேலும் உயர்ந்து இருக்கிறது. கருணாநிதியின் செல்வாக்கு வீழ்ச்சிப் பள்ளத்தாக்கில் வீழ்ந்து கொண்டிருக்கிறது.**

இந்தக்கணிப்புதமிழகத்தில் எடுக்கப்பட்ட புள்ளி விபரத்தின் மூலம் வெளியாகியிருக்கிறது.

அரசியல் கட்சிகளின் செல்வாக்கு என்ன. அரசியல் தலைவர்களின் செல்வாக்கு என்ன என்று ஆண்டுதோறும் தாம்பரம் கிறிஸ்துவக் கல்லூரி மக்களிடம் ஆய்வு நடத்தி வருகிறது.

1967-ம் ஆண்டிலிருந்து இதுவரை கிறித்துவக் கல்லூரி எடுத்த ஆய்வின் முடிவுகள் சரியான கணிப்பு என்று மெய்பிக்கப்பட்டு வந்திருக்கிறது.

1967-ம் ஆண்டு தி.மு. கழகம் ஆட்சிக்கு வரும் என்று தேர்தலுக்கு முன்னரே ஆய்வு செய்து அறிவித்தது கிறித்துவக் கல்லூரியின் ஆய்வுபிரிவு தான்.

அன்றிலிருந்து இன்று வரை தமிழகத்தின் அரசியல் மாற்றங்களை கிறித்துவக்கல்லூரியின்ஆய்வுப் பிரிவு துல்லியமாக முன் கூட்டியே எடுத்துத் கூறி வருகிறது.

தற்போது தமிழகத்தில் செல்வாக்கு பெற்ற அரசியல்தலைவர்கள்யார்யார் அவர்களின் செல்வாக்கு எந்த அளவுக்கு இருக்கிறது. என்று சென்ற மாதம்கிறித்துவக்கல்லூரியின் ஆய்வுப்பிரிவு மக்களின் கருத்தினை அறிந்தது.

### இந்திரா

எழுபது சதவிகித மக்கள் பிரதமர்இந்திராவை ஆதரிக்கிறார்கள். அல்லது அவர் மீது நல்லெண்ணம் கொண்டிருக்கிறார்கள்.

16 சத விகித மக்கள் இந்திராவிற்கு எதிர்ப்பு தெரிவிக்கிறார்கள். அரசியல் தலைவர்களிலேயே இந்திராவிற்குத்தான் எதிர்ப்பு குறைவாக இருக்கிறது.

ஆண்களில் 26 சதவிகிதத்தினரும் பெண்களில் 34 சதவிகிதத்தினரும் இந்திராவுக்கு ஆதரவு தெரிவிக்கிறார்கள்,

கல்லூரிப்படிப்புபடித்தவர்களில் 36 சதவிகிதத்தினரும் பாமர மக்களில் 23 சதவிகிதத்தினரும் இந்திராவை ஆதரிக்கிறார்கள்.

தாம்பரம் கிறித்துவக் கல்லூரியின் ஆய்வுப் பிரிவினர் தமிழகத்தின் எல்லா மாவட்டங்களுக்கும் சென்று ஆய்வு நடத்தியிருக் கிறார்கள். அவர்கள் மக்களின் கருத்தினை அறியகுக்கிராமங்களுக்கும்சென்றார்கள். அவர்கள்பேட்டி கண்டவர்களில் ஐந்தில் ஒரு பகுதியினர் குக்கிராம மக்கள். அடுத்த பாதிப் பேர் கிராம மக்கள். மற்றவர்கள் நகர வாசிகள்.

கிராமப் பகுதியானாலும் நகரபகுதியானாலும் பிரதமர் இந்திராவுக்கு ஒரே அளவில் ஆதரவு தென்படுகிறது. சமுதாயத்தின் சகல பகுதி மக்களிடையேயும் சமசீரான செல்வாக்கு இருக்கிறது.

### புரட்சித் தலைவர்

புரட்சித்தலைவருக்கு 65 சதவிகித மக்கள் ஆதரவு தெரிவிக்கிறார்கள்.

சென்ற ஆண்டைக் காட்டிலும் இந்த ஆண்டு புரட்சித்தலைவரின் செல்வாக்கு ஓங்கி உயர்ந்து நிற்கிறது.

எல்லா மாவட்டங்களிலும் புரட்சித்தலைவரின் செல்வாக்குஓங்கிநிற்கிறது புரட்சித்தலைவரின் செல்வாக்கை நெல்லையும் தர்மபுரியும் உயர்த்திப் பிடிக்க இதர மாவட்டங்கள்அதனைத்தொடர்ந்து அணிவகுக்கின்றன.

விவசாயத் தொழிலாளர்களில் 49 சதவிகித மக்கள் புரட்சித் தலைவரை தங்கள் இதயதெய்வமாகக் கருதுகிறார்கள்.

### பாமரரும் படித்தோரும் பாராட்டும் புரட்சித் தலைவர்

ஏழை எளிய மக்களில் 50 சதவிகிதத்தினர் புரட்சித்தலைவரையே தங்கள் தானைத்தலைவராகஏற்றுஇருக்கிறார்கள் ஏழைஎளியமக்கள்உழைக்கிம் மக்களிடம் மட்டும் புரட்சித்தலைவரின் செல்வாக்குஉயர்ந்திருக்கவில்லை படித்து பட்டம் பெற்றவர்களிடையேயும் புரட்சித்தலைவரின் செல்வாக்கு உயர்ந்து நிற்கிறது கல்லூரிக்கல்வி கண்ட இளைய தலைமுறையினரில் 59 சதவிகிதத்தினர் புரட்சித்தலைவரையே ஆதரிக்கின்றனர்.

கிராமப் பகுதிகளில் ஆதரவு நகரப்பகுதிகளில் வேறு நிலை என்ற நிலை இல்லை. தற்போது சமுதாயத்தின் சகலபகுதி மக்களிடையேயும் புரட்சித்தலைவருக்கு ஒரே சீரான ஆதரவு பெருக்கெடுத்து வருகிறது.

சென்றஆண்டுடன் ஒப்பிடுகையில் இந்த ஆண்டு புரட்சித்தலைவரின் செல்வாக்கு மேலும் ஓங்கி உயர்ந்து நிற்கிறது.

### அந்தோ! கருணாநிதி

கருணாநிதியின் செல்வாக்கோ மேலும் மேலும் வீழ்ச்சிப் பள்ளத்தாக்கில் வெற்றிகரமாக வீழ்ந்து கொண்டு வருகிறது.

கருணாநிதியை ஆதரிப்பவர்களை விட எதிர்ப்பவர்களின் எண்ணிக்கை தான் உயர்ந்து நிற்கிறது.

கிறித்துவக் கல்லூரியின் ஆய்வின்படி கருணா

(2-ம் பக்கம் பார்க்க

## பாதயாத்திரை பாதியில் - "அரோஹரா"!

# குளுகுளு காரில் கருணாநிதி ஜிலுஜிலு பயணம்

### உருண்டு கொண்டே செல்வேன் என்றவர் உல்லாச உலா

மதுரை, பிப். 21- திருச்செந்தூருக்கு கால்நடைப் பயணம் போகும் கருணாநிதி பாதயாத்திரையை இடை இடையே "அம்போ" என்று விட்டு விட்டு "குளுகுளு" காரில் "ஜிலுஜிலு" என்று பயணம் செய்து வருகிறார்.

புரட்சித் தலைவரின் வேண்டுகோளையும் ஏற்காது வீம்புக்கும் விளம்பரத்திற்கும்மதுரையிலிருந்து பாதயாத்திரை துவங்கிய கருணாநிதி ஒவ்வொரு நாள் பகலிலும்இரவிலும் "குளு குளு" அறை எங்கே இருக்கிறது என்று தேடி "குளு குளு" காரிலேயே சென்று தங்கினார். தூங்கினார்.

மக்களின் அனுதாபத்தைத் தேடுவதற்காக நரிக்கு வைத்த நாட்டு வெடிகுண்டை தனக்கு வைத்ததாகப் பிரச்சாரம் செய்து பார்த்தார்.

பாதயாத்திரைக்கு மக்களிடம் "பவிசு" ஏற்படாததால் இனி நடந்து என்ன பயன் என்று ஆங்காங்கே கார் பயணத்தை மேற்கொண்டு வருகிறார்.

கடந்த வெள்ளிக்கிழமை கோவில்பட்டியிலிருந்து எட்டயபுரத்திற்கு கருணாநிதி கால்நடைப் பயணம் செல்ல திட்டம் வகுக்கப்பட்டிருந்தது.

ஆனால் கருணாநிதி இளம்புவனம் என்ற ஊர் வரை சென்றார் பின்னர் அங்கிருந்து எட்டயபுரத்திற்கு குளுகுளு கார் யாத்திரை மேற்கொண்டார்.

எட்டயபுரத்திலிருந்து எப்போதும் வென்றான் கிராமத்திற்கு கருணாநிதி கால்நடையாகப் போவார் என்று அறிவிக்கப் பட்டிருந்தது. ஆனால் கருணாநிதிஎட்டயப்பநாயக்கன்பட்டியிலிருந்து எப்போதும் வென்றான் வரை கார் யாத்திரை செய்தார்.

சனிக் கிழமையன்று கருணாநிதி எப்போதும் வென்றான் கிராமத்திலிருந்து கால்நடைப் பயணத்தை துவக்கவேண்டும். அன்று பகல் குறுக்குச்சாலையில் தங்க வேண்டும்.

குறுக்குச் சாலைக்கு வந்த கருணாநிதி நேராக தாழையூத்து சிமெண்ட் ஆலையில் உள்ள விருந்தினர் இல்லத்துக்குச் சென்றார்.

மீண்டும்அவர் குறுக்குச் சாலைக்கு வந்து அங்கிருந்து பயணம் போகவில்லை.

திருநெல்வேலி, வாகைக்குளம், புதுக்கோட்டை வழியாகக்காரில் தூத்துக்குடிக்குப் பறந்து சென்றார்.

13 கிலோ மீட்டர்தூரம் அவர் நடக்கவில்லை. காரில் பயணம் செய்து இரவில் செல்லவேண்டிய தூத்துக்குடிமாப்பிள்ளை ஊரணிக்குச் சென்றார்.

இரண்டு நாட்களில் மட்டும் அவர் நடப்பதற்கு பதிலாக 22 கிலோ மீட்டர் தூரம் கார் யாத்திரை செய்திருக்கிறார்,

★ பால் கமிஷன் அடிப்படையில் விசாரணை போட்டுவிட்டோம்
★ அறிக்கையும் சபையில் வைத்துவிட்டோம் - இதற்கு பிறகும்

## கருணாநிதி கால்நடையாகப் போவது

# விளம்பர ஸ்டண்ட்

## அமைச்சர் பண்ருட்டியார் முழக்கம்

## கருணாநிதி குட்டிக்கரணம் போட்டாலும் புரட்சித்தலைவர் செல்வாக்கை குறைக்கமுடியாது

**சென்னை, பிப். 21- பால் கமிஷன் அறிக்கையின்படி நடவடிக்கை எடுக்க அரசு உத்தரவிட்டுள்ளது. பால் கமிஷன் அறிக்கையும் சட்டசபையில் தாக்கல் செய்யப்பட்டுள்ளது.**

**இந்த நிலையில் கருணாநிதி கால்நடையாகப் போவது ஒரு விளம்பர ஸ்டண்ட் என்று அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்.**

சென்னை 53-வது வட்டம், தாதா முத்தியப்பன் தெருவில் நடந்த பிரும்மாண்டமான கழகப் பொதுக் கூட்டத்தில் கலந்துகொண்டு பேசுகையில் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறியதாவது:

இங்கே பேசியவர்கள் எல்லாம் கருணாநிதி நெடும் பயணம் போவதைப்பற்றிக் குறிப்பிட்டு பேசினார்கள்.

தமிழகத்தின் எந்த மூலை முடுக்குகளிலிருந்தும் நீதி கேட்டு சென்னைக்குத்தான் வருவார்கள். சில விசித்திரமான பேர்வழிகள் நீதி கேட்டு மதுரையிலிருந்து திருச்செந்தூர் வரை போகிறார்கள்.

### விளம்பர பயணமா?

கருணாநிதி நீதி கேட்டுப் போகிறாரா? விளம்பரம் தேடி போகிறாரா என்று தெரியவில்லை.

கொள்கை வழி அரசியலை அறிந்த எங்களுக்கு உண்மையிலே வருத்தம் உண்டு.

அண்ணா, பெரியார் காலத்தில் படித்துக் கொண்டிருந்த போது, அவர்கள் பேசிய கருத்துக்களால் ஈர்க்கப்பட்டு அவர்கள் வழியில் கொள்கைகளை தாங்கி வந்தவர்கள் நாங்கள்.

இந்த நாட்டு மக்களை வாழவைக்க வேண்டும். மக்களிடையே ஜாதி வேறுபாடு இல்லை. ஏற்றத்தாழ்வுகளுக்கு இடமில்லை இந்த மண்ணிலே பிறந்த அனைவரும் சமம் என்று கூறி தமிழக மக்களுக்காக பாடுபட்டவர் தந்தை பெரியார்.

### விசித்திரமானது

தமிழகமக்களின் அரசியல் உரிமைகளுக்காக அரும்பாடு பட்டவர் பேரறிஞர் அண்ணா

இப்படி கொள்கை வழி அரசியலைப் பார்த்த நான் நெடிய பயணம் போகிறவர்களை பார்க்கும்போது விசித்திரமாக இருக்கிறது.

நான் அவர்களை கேட்கிறேன். எந்தக் கொள்கையைநிறைவேற்ற எந்த மக்களின் வாழ்வுக்காக வழி நடைப்பயணம் போகிறீர்கள்?

காலையில் எழுந்தவுடன் யார் வேலைக்கு அழைக்கப் போகிறார்கள் என்று ஏங்கி தவித்து காத்துக் கொண்டிருக்கும் மக்களை வாழ வைக்கவா இல்லை.

எனக்கும் தெரியவில்லை. உங்களுக்கும் தெரியவில்லை கருணாநிதிக்கும் தெரியவில்லை என்றால் ஒன்று தெரிகிறது. விளம்பரத்துக்கும், புகழுக்கும் வித்தியாசம் தெரியாமல் கருணாநிதி போகிறார்.

மத்தாப்பு கொளுத்தினால் அதன் வண்ண ஜாலத்தைக் கண்டு சிறுவர் பூரிப்பர். மகிழ்ச்சியடைவர். ஆனால் ஒரு விநாடி கழிந்தபிறகு அது கரித்துண்டாகி காட்சி தரும், அதுதான் விளம்பரம். இங்கேகூட கூட்டத்துக்காக பெரிய போஸ்டர்கள் ஒட்டியிருக்கின்றனர். கூட்டம் வர வேண்டும் என்பதற்காக. ஆனால் விளம்பரமே புகழாகாது. அதற்கு ஓரளவு ஜனநாயகம் தேவை.

ஒருவர் இறந்து விட்டாலும் என்றும் நிலைத்து நிற்பது தான் புகழ். பேரறிஞர் அண்ணாசமாதியை பார்க்கிறோம். அங்கே அணையா விளக்கு உள்ளதே அது தான் புகழ்.

மத்தாப்பு பற்றிச் சொன்னேனே அதுதான் விளம்பரம்.

விளம்பரத்துக்கும் புகழுக்கும் வேறுபாடு தெரியாமல் கருணாநிதி திருச்செந்தூர்வரை செல்கிறார்.

### அவர் வளர்ந்த விதம் அப்படி

ஆரம்ப காலத்திலிருந்து அப்படி வளர்ந்துள்ளார்.

எந்த கொள்கையை நிறைவேற்ற அவர் போகிறார் என்பதை தயவு செய்து எண்ணிப் பார்க்க வேண்டும்.

தாழ்த்தப்பட்ட மக்கள் மீதான தீண்டாமைக் கொடுமை போக வேண்டும் என்று வழிநடைப் பயணம் நடத்துகிறாரா?

பெரும் நிலக்கிழார்கள் சேர்த்து வைத்துள்ள நிலத்தை நிலமற்ற ஏழை விவசாயிகளுக்கு பங்கு போட்டுக் கொடுக்கப் போகிறாரா?

அவரே சொல்லிவந்தாரே மாநில சுயாட்சி - அதற்காக மக்களை தட்டி எழுப்ப வழிநடைபயணம் போகிறாரா?

பின் எதற்காக! தெரிந்தும் போகிறார் என்றால் என்ன பொருள்!

சட்டசபை நடந்து கொண்டிருக்கும் சமயத்தில் போக வேண்டிய அவசியம் என்ன?

இப்படி பிரச்சினைக்கு நெடிய பயணம் என்றால் ஒவ்வொருவரும் ஒவ்வொரு பிரச்சினைக்கு நெடிய பயணம் போகலாமே.

பிரச்சினை யாருக்குத்தான் இல்லாமல்இல்லை.

இப்படி ஒவ்வொருவரும் பிரச்சினைக்காக ஒவ்வொரு ஊருக்கு புறப்பட்டு போனால் சட்டசபை எதற்காக உள்ளது.

ஒவ்வொரு அரசியல் கட்சியும் பிரச்சினையை மையமாக வைத்துபேசும் இடம்தான்சட்டமன்றம்.

சட்டசபை என்றால் பக்கத்திலே கருணாநிதியும் இருக்கிறார்.

பிரச்சினைகளை தீர்க்க வேண்டும் என்பதற்காக அரசியல் கட்சித் தலைவர்களை கொண்டு வந்து அங்கே பேசுகிறோம். ஒருவருக்கு ஒருவர் நேருக்கு நேர் பேசுகிற இடம்தான் அது.

அப்படி யிருக்கும்போது பேசமுடியாத இடத்துக்குப் போகிறார் என்றால் என்ன பொருள்?

சட்டமன்றம் நடக்கிறது. இங்கே பேசவில்லை. அங்கே போகிறார். இதற்குஎன்ன பொருள்? மக்களை ஏமாற்றலாம் என்று பொருள் அல்லவா?

தயவு செய்து அவரை பழைய பாசத்தோடு கேட்டுக் கொள்கிறேன். இந்த நெடிய பயணத்தை ஏன் மேற்கொண்டீர்கள்?

புரட்சித்தலைவர் புகழ் சீர் குலைய வேண்டும் என்பது உங்கள் நோக்கமாக இருந்தால் புரட்சித் தலைவர் புகழ் சீர்குலையாது.

என்னதான் குட்டிக்கரணம் போட்டாலும் உங்களால் அதுமுடியாது. புரட்சித்தலைவரின் கோட்டையில் என்றும் உங்களால் ஓட்டைபோட முடியாது.

தவறான எண்ணத்தால் வீண்முயற்சிகளில் ஈடுபடுகிறார்.

இந்த நெடிய பயணம் தேவைதானா என்று அவரை மேலும் கேட்கிறேன்.

அரசு அப்படி என்ன தவறு செய்து விட்டது?

பால் விசாரணைக் கமிஷன் பற்றி ஒரே ஒரு கருத்து கூறுகிறேன்.

திருச்செந்தூர் சம்பவம் தொடர்பாக முதல்வர் புரட்சித்தலைவர் பெரிய மனது வைத்து பாலை நீதிபதியாக நியமித்து "கொலையா—தற்கொலையா" என்று கண்டுபிடித்துச் சொல்லுங்கள் என்று விசாரணைக் கமிஷன் வைத்தார்.

அப்போதும் "இது வெறும் கண்துடைப்பு" என்று சொன்னார்கள்.

நீதிபதி பால் இப்போது எல்லாவற்றையும்பார்த்து விட்டு எனக்கும் சந்தேகமாக உள்ளது என்று கூறியிருக்கிறார்.

எங்களுக்குச் சந்தேகமாக இருக்கிறது கண்டுபிடித்து சொல்லுங்கள் என்று அவரை நியமித்தால் அவரும் எனக்கு சந்தேகமாக உள்ளது என்கிறார்.

### கருணாநிதியும் குழப்பமும்

தனித்துறை போலீசை வைத்து விசாரியுங்கள் என்று கூறியுள்ளார்.

இன்னார்தான் செய்தார் என்று கூறவில்லை. எங்களுக்கு சின்ன சந்தேகம் என்றால் அவருக்கு பெரிய சந்தேகமாக இருக்கிறது. இந்தவிஷயத்தில் கருணாநிதிதேவையில்லாமல் தன்னையும் குழப்பி, தமிழகத்தையும் குழப்பி வருகிறார்.

சட்டசபைக்கு அவர் (புரட்சித்தலைவர்) வரமாட்டார் வந்தாலும் பேசத்தெரியாது என்றெல்லாம் முன்பு சொன்னார்கள்.

இன்றையதினம் சட்டமன்ற மேலவையில்யாரும் பேசாத அளவு தொடர்ந்து 3 நாட்கள் பேசியிருக்கிறார்முதல்வர் புரட்சித்தலைவர்.

இங்கே இருப்பதற்கு கூட அவர்களால் முடியவில்லை. எங்கோ போய் விட்டனர்.

இன்றுகூட நான் சட்ட மேலவையில் முதல்வர் புரட்சித் தலைவரின் உணர்வுகளை எடுத்துக் கூறியிருக்கிறேன்.

மின்சார வாரிய ஊழியர்கள் வேலை காலத்தில் 'ஷாக்' அடித்துஇறந்தால் அவர் குடும்பத்தின் கதி என்ன? அந்தக் குடும்பம் எங்கே போகும்? அந்தக் குடும்பம் தன்மானத்தோடு வாழ வழி செய்ய வேண்டும் என்றுமுதல்வர் புரட்சித்தலைவர் உணர்ந்துள்ளதால் அப்படிபணிக் காலத்தில் இறக்கும் ஊழியர்களின்பிள்ளைகளுக்கு வேலை உண்டு எனக்கூறியிருக்கிறோம். இப்படி 450 பேர்களுக்கு கொடுக்கப் போகிறோம் என்று அறிவித்து உள்ளோம்.

இது மனிதாபிமான செயல் இல்லையா?

### எது அக்கிரம ஆட்சி?

"அக்கிரம ஆட்சி ஒழிக்க நான் போகவில்லை. ஆட்சியில்உள்ள அக்கிரமங்களை ஒழிக்கப் போகிறேன்" என்கிறார் கருணாநிதி.

இப்படி மனிதாபிமான செயல்கள் நடந்து வருகின்றதே இது அக்கிரமமா?

படித்தும் வேலையில்லாமல் ஏர் ஓட்டியும், களை பிடுங்கியும் வாழும்படித்த பட்டதாரிகளான தாழ்த்தப்பட்ட இளைஞர்கள் 2ஆயிரம் பேருக்கு மின் வாரியத்தின் மூலம் மட்டும் வேலை கொடுக்கத் தீர்மானித் திருக்கிறோம்.

நான் (கருணாநிதி) இருக்கவேண்டிய இடத்தில் நீ(புரட்சித்தலைவர்) இருக்கலாமாஎன்பதுதான் கருணாநிதியின்எண்ணம்.

அதனால்தான் நாட்டில் நடக்கும் நல்ல திட்டங்களை பாராட்ட அவருக்கு மனமில்லை.

"அறங்காவலர்கள் விலகி விட்டனர். விசாரணையும் போட்டு விட்டோம். அறிக்கையும் வைத்தாகி விட்டது. இனியும் தேவையில்லாமல் ஏன் போகிறீர்கள். நெடிய பயணம் வேண்டாம்" என்று முதல்வர் புரட்சித்தலைவர் வேண்டுகோள்விடுத்தார். அது மனிதாபிமானம்.

தி.மு.க.வில் புரட்சித் தலைவர் இருந்த போது கருணாநிதி எவ்வளவு வரவேற்போடுஇருந்தார்.

இன்று கருணாநிதி எங்களை எல்லாம் விரட்டி வெளியேற்றிய பிறகு இன்று அவரைச் சுற்றியிருப்பவர்கள் அவரை என்ன பாடு படுத்துகிறார்கள் என்பதைப் பார்க்கும்போது அனுதாபமாக இருக்கிறது.

### பரிதாபமாக இருக்கிறது

அவரை வெய்யிலில் தார் சாலையில் இழுத்துச் செல்கிறார்கள்.

இன்னுமா அவர்களை நம்பிக்கொண்டிருக்கிறார் அவரைப்பார்த்தால் பரிதாபமாக இருக்கிறது. இந்த நிலைமை அவருக்கு தேவையில்லை.

அவர் நல்லவழியில் ஈடுபாடுகொண்டு நல்ல பயணத்தைமேற்கொள்ள வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் பேசினார்.

அமைச்சர் பண்ருட்டி முன்னிலையில் 50 பேர் தி.மு.க.விலிருந்து விலகி கழகத்தில் சேர்ந்தனர்.

கூட்டத்திற்கு ராமதாஸ் தலைமை வகித்தார். இ. மதுசூதனன், மண்ணடிகிருஷ்ணமூர்த்தி கு. கஜேந்திரபாபு கே. எல்லப்பன். எல்' குமார், எஸ், பி. டி. விஜயன். எஸ்.எம். கருணாநிதி, ஆனந்தன், அயத்பாட்சா, அருள், க. மணி, திண்டிவனம் சோலை வி. மாரிமுத்து ஆகியோர் பேசினர்.

---

## தனிப் பெரும் தலைவர்...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

நிதியை ஆதரிப்பவர்கள் 20 சதவிகிதத்தினர். ஆனால்எதிர்ப்பவர்களோ 55 சதவிகிதத்தினர்.

கருணாநிதியை வேம்பென வெறுப்பவர்களின் எண்ணிக்கைசென்றஆண்டைக் காட்டிலும் இந்த ஆண்டு வளர் பிறையாய் வளர்ந்து வருகிறது.

சமுதாயத்தின் சகல பகுதி மக்களிடையேயும் கருணாநிதியின் செல்வாக்கு சிந்தனை. வெயிலில் பாறையில் வைத்த பனிக்கட்டிபோல் கரைந்து வருகிறது.

### முதல் பெரும் இயக்கம் கழகமே

தமிழகத்திலுள்ள அரசியல் இயக்கங்களில் முதல் பெரும் கட்சி அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகமே என்று கிறித்துவக் கல்லூரியின் ஆய்வுகணித்துக் கூறுகிறது.

தமிழகத்தில் 39 சதவிகித மக்கள் அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகத்தையே விரும்புகின்றனர். (இவர்கள் அண்ணாதி.மு.கழகஉறுப்பினர்களோ அல்லது மன்ற உறுப்பினர்களோ அல்ல. இவர்கள் இந்த அமைப்புகளுக்குவெளியே நின்று அனைத்திந்திய அண்ணாதி.மு,கழகத்தை ஆதரிப்பவர்கள் புரட்சித் தலைவரை நேசிப்பவர்கள்.)

அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகம் "மக்கள் இயக்கம்" என்பதற்குப் பொருளாய் சமுதாயத்தின் சகல பகுதி மக்களின் ஆதரவையும் பெற்றுத் திகழ்கிறது.

அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகத்திற்கு அடுத்தாற்போல இந்திரா காங்கிரஸ் கட்சிக்கு செல்வாக்கு தென்படுகிறது. 29 சதவிகித மக்கள் இந்திரா காங்கிரஸ் கட்சிக்கு ஆதரவு தெரிவிக்கிறார்கள்.

தி.மு. கழகத்திற்கு 20 சதவிகித ஆதரவு இருக்கிறது.

கம்யூனிஸ்ட் கட்சிகளுக்கு மூன்று சதவிகித மக்களே ஆதரவுதெரிவிக்கின்றனர்.

ஜனதாக்கட்சியின்செல்வாக்கு இரண்டு சதவிகிதத்தைஎட்டிப்பிடித்திருக்கிறது.

எந்தக் கட்சிக்கும் ஆதரவு தெரிவிக்காத "கனதனவான்களும்" இருக்கிறார்கள் அவர்கள் 5 சதவிகிதத்தினரே.

95 சதவிகித மக்கள் ஏதாவது ஒரு அரசியல் கட்சியை ஆதரிப்பவர்களாக இருக்கிறார்கள். தமிழகத்தில் அரசியல் உணர்வு வளர்ந்திருப்பதற்கு இது எடுத்துக் காட்டாகும்.

கிறித்துவக் கல்லூரியின் ஆய்வுப்பிரிவினர் எடுத்த புள்ளி விபரங்கள் கம்ப்யூட்டர் முறையில் கணிக்கப்பட்டு வெளியிடப்படுகிறது.

---

## இலவச திருமணம்...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

தோம் இங்கேபேசியராதா தியாகராஜன்இதுஇலவசத் திருமணமல்ல, சிறப்புத்திருமணம் என்று அழைக்கப்பட வேண்டுமென்றார்.

இனி அறநிலையத்துறை மூலம் நடத்தப்படும் திருமணங்கள் சிறப்புத் திருமணங்கள் என்று அழைக்கப்படும். இலவச திருமணம்என்பது அவமதிப்புபோல உள்ளதுஎன்று உணருகிறேன். இங்கே மணமக்களாக இருக்கும் தம்பதிகள் ஏழைகளாக இருக்கலாம். ஆனால் ஏமாற்றுபவர்கள் அல்ல. செல்வந்தர்களாகஇல்லாமல் இருக்கலாம். ஆனால் செல்வந்தர்களைஉருவாக்க உழைப்பவர்கள் ஆவர்.

லட்சக் கணக்கான ரூபாய் செலவிட்டு பல்லாயிரக்கணக்கான ரூபாய் செலவில் அழைப்பிதழ் அச்சிட்டு திருமணத்தை நடத்தினாலும் அது இப்படிசிறப்பாக அமையுமா? இவ்வளவு சீரோடும் சிறப்போடும் அந்த லட்சாதிபதி வீட்டுத் திருமணம் நடந்திருக்குமா?

இங்கே மணமக்கள் பெற்றிருக்கும் தட்டுப் புரிசுபொருள்கள் யாரோ கொடுத்ததல்ல. தமிழகத்திலுள்ள ஆன்மீக பெருமக்கள் கொடுத்தது.

இந்த ஆலய விழாவில் அமைச்சர் குடும்பமா என்றுகேட்கிறார்கள்யார் திருமணம் நடத்தினாலும் பாராட்டவேண்டும்.

மணமக்கள் காலில் விழுந்து வணங்கினால் வெறும் கையோடு அனுப்பக் கூடாது என்பது தமிழ்நாட்டு பண்பாடு' எனது துணைவியார் ராஜம்மாளும் எனது செல்விகளும் அவர்களது பணத்திலிருந்து ஒவ்வொரு தம்பதிக்கும் 100 ரூபாய் தருகிறார்கள்.

கடந்த ஆண்டு ஆகஸ்ட் மாதம் இதே கோயிலில் இதே இடத்தில் சமபந்தி போஜனம் நடைபெற்றது ஜாதி மதம் பார்க்காமல் உணவருந்தினோம்.

அன்றைய தினம் ஒரு மணமகனும், மணமகளும் குடியாத்தத்திலிருந்து வந்திருந்து திருமணம்செய்து கொள்ளவேண்டும் என்றார்கள். அதிகாரிகளிடம் சொல்லி அவர்களிடம் உள்ள சான்றுகளை பற்றி விசாரிக்க சொன்னோம். சான்றுகள் சரியாக இருந்தன. அந்த மணமகன் தாலி கட்டினான். அப்போது அவர் கொண்டு வந்திருந்த தாலியைப் பார்த்தேன். அது தங்கத்தால் செய்யப்பட்டது அல்ல. தாலியைப் பற்றி அவர்களிடம் கேட்டேன். 5 ரூபாய் கொடுத்து கில்ட் தாலி செய்ததாக சொன்னார், அதைப் பார்த்த முதல்வர் புரட்சித்தலைவர் இதயத்தில் ரத்தம் கசிந்தது. இதனால் ஆலயங்களிலிருந்து தங்கத் தாலி வழங்கப்பட வேண்டுமென்று உத்தரவிட்டார்.

### தங்கத்தாலி

2 கிராம் மதிப்புள்ள தங்கத்தாலி இப்போது வழங்கப்படுகிறது. கடந்த 4 ஆண்டு காலமாக தமிழகத்திலுள்ள கோவில்களில் வருமானம் பெருகி வருகிறது.

பழனி கோவிலில் 1976-ம் ஆண்டு ஜூன் மாதம் முடிய 1 ஆண்டு கால வருமானம் 1 கோடியே 6 லட்சத்து 27 ஆயிரத்து 549 ரூபாய் 43 பைசா 80-81ம் ஆண்டு ஜூன் முடிய 1 கோடியே 95 லட்சத்து 35ஆயிரத்து ரூபாய் 50 பைசா.

அபிஷேகத்துக்கென்று வாங்கப்படும் அபிஷேக கட்டணம் 1976ல் 4 லட்சத்து 27 ஆயிரமாக இருந்தது. தற்போது 79 லட்சத்து 69-ஆயிரமாக 4 ஆண்டுகாலத்தில்உயர்ந்திருக்கிறது.

இதிலிருந்து பக்தர்கள் கோயிலுக்கு வருவது உயர்ந்திருக்கிறதா? குறைந்திருக்கிறதா என்பதை நீங்கள் உணர்ந்து கொள்ளலாம்.

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ. பேசினார்.

---

## வை. பெருமாள் நிகழ்ச்சிகளில் மாறுதல்

சென்னை. பிப். —21 அண்ணா தொழிற்சங்கப் பேரவை பொதுச்செயலாளர் வை. பெருமாள் பிப்ரவரி 23, 24 தேதிகளில் சென்னையில்நடைபெறும் சர்க்கரை ஆலை ஊழியர்கள் கோரிக்கை பற்றிய பேச்சு வார்த்தையில் கலந்து கொள்வதால் அந்த இரு தேதிகளில் அவர் கலந்து கொள்ள இருந்த குமரி மாவட்ட நிகழ்ச்சிகள் ஒத்திவைக்கப்படுகின்றன. ஆனால் ஏற்கெனவே ஏற்றுக்கொண்ட 25-ந் தேதி நிகழ்ச்சிகளில் அவர் கலந்துகொள்வார்.

---

## டெல்லியில் ஜால வித்தைக்காரர் மாநாடு

புதுடெல்லி. பிப். 21— ஜால வித்தைக்காரர்களின் மாநாடு இன்றிலிருந்து 23-ந் தேதிவரை டெல்லியில் நடக்கிறது. நாடு முழுவதுமிருந்து புகழ் பெற்ற ஜாலவித்தைக்காரர்கள் இந்த மாநாட்டில் கலந்து கொண்டு ஜாலவித்தைகளை செய்துகாட்டுவார்கள்.

இந்த மாதம் 23-ந் தேதி உலகப் புகழ் பெற்ற ஜால வித்தைக்காரரான பி. சி. சர்க்காரின் பிறந்தநாளாகும். அன்றைய தினம் 'மாஜிக் தினமாக' கொண்டாடப்படும்.

சிறந்த நிகழ்ச்சிகளை வழங்கி முதலிடம் பெறும் ஜால வித்தைக்காரர்களுக்கு மத்திய அமைச்சர் வசந்சாத்தே பரிசுகள் வழங்குகிறார்.

---

## டால்மியாபுரம் தொழிற்சங்க தோழர்களுக்கு

திருச்சி மாவட்டம் டால்மியாபுரம் தொழிற்சங்க தோழர்கள் ஆலோசனைக் கூட்டம். திருச்சி நகர பயணியர் விடுதியில் அனைத்துலக எம்.ஜி.ஆர். மன்றத் தலைவர் திரு. பி, முசிறிப் புத்தன் தலைமையில் மாவட்ட தொழிற்சங்கத் தலைவர் திரு. பாலச்சந்திரன், செயலாளர் வழக்கறிஞர்கே.பெருமாள் ஆகியோர்முன்னிலையில் 24-2-82 காலை 10 மணிக்கு நடைபெறும்.

டால்மியாபுரம் பகுதி தொழிற்சங்கத் தோழர்கள் தவறாது கலந்து கொள்ளவேண்டுமாய் கேட்டுக் கொள்கிறேன்.

இவண்
**வை. பெருமாள்**
செயலாளர்
அனைத்திந்திய அண்ணா
தி.மு.கழக தொழிற்சங்க பிரிவு.

சென்னை—14
21—2—82

---



---

# விழுப்புரம் கலவரம்

# 11பேருக்கு தண்டனை

## அரசு நியமித்த தனி நீதிமன்றம் தீர்ப்பு

**கடலூர், பிப், 21-கடந்த 1978-ம் ஆண்டு ஜூலை மாதம் விழுப்புரத்தில் நடந்த கலவரம் சம்பந்தமாக அரசு அமைத்த தனிக்கோர்ட் நீதிபதி சொக்கலிங்கம் 3 வழக்குகளில் 11 குற்றவாளிகளுக்கு கடுங்காவல் தண்டனை விதித்து தீர்ப்பு அளித்துள்ளார்.**

தென்னாற்காடு மாவட்டம் விழுப்புரத்தில் கடந்த 1978ம் ஆண்டு ஜூலைமாதத்தில் ஆதிதிராவிட சமூகத்தினர் மற்றும் ஆதிதிராவிடர் அல்லாதார்க்கு இடையே ஏற்பட்ட கலவரத்தில் 12 ஆதிதிராவிடர்கள் கொலையுண்டனர் என்பது தெரிந்ததே. இந்தக் கலவரத்தில் பல வீடுகளுக்கு தீ வைக்கப்பட்டது. பலர் காயம்அடைந்தனர்.

கலவரப் பகுதிகளில் உடனடியாக கழக அரசு பந்தோபஸ்து நடவடிக்கைகளை மேற்கொண்டது. சட்டம் ஒழுங்கு நிலைமையை சீர்படுத்தி கலவரப் பகுதிகளில் அமைதி ஏற்படவும் அரசு அனைத்து நடவடிக்கைகளையும் எடுத்தது.

இந்தக் கலவரம் சம்பவம் பற்றி விசாரணை செய்ய தமிழக அரசு விசேஷ நீதிமன்றத்தையும் ஏற்படுத்தியது.

### விசேஷ நீதிமன்றம்

விசேஷ நீதிமன்றத்தில் 24 வழக்குகளை போலீசார்தொடுத்தனர். இந்த வழக்குகளில் 17 வழக்குகள் ஆதிதிராவிட சமூகத்தினர் அல்லாதார் மீது போடப்பட்டுள்ளது. மற்ற 7 வழக்குகள் ஆதிதிராவிடர் சமூகத்தினர் மீதானவழக்குகள். தவிர இந்தக் கலவரத்தில் 12 ஆதிதிராவிடர்கள் கொல்லப்பட்டதுசம்பந்தமாகவும் 3 வழக்குகள் விசேஷ கோர்ட்டில் தாக்கல் செய்யப்பட்டது.

தனி கோர்ட் கூடுதல் செஷன்ஸ் நீதிபதி எஸ். பி. சொக்கலிங்கம் நேற்று 3 வழக்குகளில் தீர்ப்பளித்தார்.

### தண்டனை விவரம்

கடந்த 1978ஆம் ஆண்டு ஜூலை மாதம் 25ம் தேதி விழுப்புரத்தில் கலவரத்தை ஏற்படுத்தி காவல்துறை அதிகாரிகளை கொல்ல முயற்சி செய்ததாகவும், ஆதிதிராவிடர் சமூகத்தைச் சேர்ந்தவர்களின் 15வீடுகளுக்கு தீவைக்க முயற்சி செய்ததாகவும் போடப்பட்ட வழக்கில் 11 குற்றவாளிகளுக்கு நீதிபதிதண்டனை விதித்தார்.

11பேர்களுக்கும்2ஆண்டுகள் முதல் 3 ஆண்டுகள் வரை கடுங்காவல் தண்டனை விதித்து தீர்ப்பு வழங்கினார்.

இரண்டாவது வழக்கில் குற்றம் சாட்டப்பட்ட சோடாக்கார ஆறுமுகம் உள்பட 4 பேர்களையும் நீதிபதி விடுதலை செய்து தீர்ப்பு வழங்கினார்.

3-வது வழக்கில் 7 பேர்களுக்கு 3 ஆண்டு கடுங்காவல் தண்டனை விதித்து தீர்ப்பளித்தார். கடந்த 78ம் ஆண்டு ஜூலை24ம் தேதி ஒரு ஆசிரியரின் வீட்டுக்கும் ஆதிதிராவிடர் ஒருவரின் வீட்டுக்கும் இந்த குற்றவாளிகள் தீ வைத்துக் கொளுத்தியதாக இவர்கள் மேல் வழக்கு தொடரப்பட்டிருந்தது. இந்த வழக்கில் சம்பந்தப்பட்ட ஷேக்பாஷா உள்பட 6 எதிரிகளுக்கும் இந்திய தண்டனைச் சட்டம் 147 பிரிவுபடி 2 ஆண்டு கடுங்காவலும் 436 பிரிவின்படி 3 ஆண்டு கடுங்காவல் சிறைத்தண்டனையும் விதிக்கப்பட்டது. இந்த இரண்டுதண்டனைகளையும் ஏககாலத்தில் அனுபவிக்கவும் நீதிபதி தீர்ப்பளித்தார். இந்த வழக்கில் சம்பந்தப்பட்ட மற்றொரு நபரான ஆறுமுகத்தை நீதிபதி சொக்கலிங்கம் விடுதலை செய்தார்.

மற்ற வழக்குகள் பற்றிய விசாரணைகள் இந்த ஆண்டு மார்ச்சு மாதம் இறுதியில் தொடர்ந்து நடக்கும் என்று தெரிகிறது.

---

மேலும் மின்சாரம் பெற அமைச்சர் பண்ருட்டியார் அறிவிப்பு

## கேரள அரசுடன் 24-ம்தேதி பேச்சு

சென்னை, பிப். 21—தமிழகத்திற்குமேலும்மின்சாரம் பெறுவது பற்றி இம்மாதம் 24-ந் தேதி அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் பேச்சு வார்த்தை நடத்துகிறார்

திருவனந்தபுரம்சென்று கேரள அரசுடன் பேச்சு வார்த்தை நடத்தப் போவதாக நேற்று அவர் மேலவையில் தெரிவித்தார்.

---

தொழிலாளர்களுக்கு வாரி வழங்கும்

## அரசுக்கு மின்வாரிய அண்ணா தொழிலாளர்கள் நன்றி

சென்னை, பிப். 21—தமிழ்நாடு மின்வாரிய ஊழியர்களுக்கு இதுநாள் வரை எந்தஅரசும் செய்ய முடியாத அனைத்து ஊழியர்களுக்கும் ஒய்வூதியமும் வீட்டுவசதியும் களப்பணியாளர்களுக்கு சலவைப்படியும் தந்துள்ள இதயதெய்வம் முதல்வர் புரட்சித்தலைவருக்கும் மின்துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரனுக்கும் மின்வாரிய அண்ணா தொழிலாளர் சங்கத்தின் சார்பில்நன்றியும் பாராட்டும் தெரிவித்துக் கொள்கிறோம் என்று தமிழ்நாடு மின்வாரிய அண்ணா தொழிலாளர் சங்கப் பொதுச் செயலாளர் செ. ரா. சீனிவாசன்கூறியுள்ளார்.

---

## இளைஞர் காங்கிரஸ் அலுவலகம் தாக்கப்பட்டது

சென்னை, பிப். 21—சென்னையிலுள்ளஇளைஞர் காங்கிரஸ் அலுவலகத்தை நேற்றிரவு அடையாளம் தெரியாத நபர்கள் தாக்கி, அங்கிருந்த போஸ்டர்களை தீயிட்டு கொளுத்தியிருக்கின்றனர் என்று போலீசார் கூறினர்.

வடசென்னைமாவட்ட இளைஞர்காங்கிரஸ்தலைவர் பதவி நீக்கம் தொடர்பாக இந்த சம்பவம் நடந்ததாகத் தெரிகிறது.

இது சம்பந்தமாக அந்த அலுவலக மேலாளர் போலீசில் புகார் கொடுத்துள்ளார். அந்தப்புகாரில் அவர் கூறியிருப்பதாவது:

இந்த சம்பவம் நடப்பதற்கு முன்னால் சில தொலைபேசிகள்வந்தன. பேசி முடிந்தவுடன் திடீரென்று 10 பேர் விசிட்டர்கள் என்று சொல்லி அலுவலகத்தில் நுழைந்து அலுவலகச் சொத்துக்களுக்கு சேதம் விளைவித்தனர்.

இவ்வாறு அவர் போலீசில் கூறினார்.

போலீசார் இது சம்பந்தமாக வழ்க்கு ஒன்று பதிவு செய்து புலன் விசாரணை செய்து வருகின்றனர்.

---

Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras 600 02[illegible]

Editor : E. PARASURAMAN

---

தன்னிறைவுத் திட்டம் மூலம்

## கிராம ராஜ்யத்தை உருவாக்கும் முதல்வர் புரட்சித்தலைவர்

ஆற்காடு சேதுராமன் பாராட்டு

**சென்னை, பிப். 21- தன்னிறைவுத் திட்டத்தை செயல்படுத்தி கிராம ராஜ்யத்தை முதல்வர் புரட்சித்தலைவர் உருவாக்கி வருகிறார் என்று ஆற்காடு சேதுராமன் கூறினார்.**

சட்டசபையில் கழக உறுப்பினர் ஆற்காடு சேதுராமன் பேசுகையில் கூறியதாவது:-

பஞ்சாயத்துத்தேர்தலை அறிவித்த போது எங்களுடைய அரசு நிச்சயமாக தேர்தலை நடத்தவேண்டுமென்ற நல்ல எண்ணத்தில் அறிவித்தது. அதற்காக எல்லா அதிகாரிகளையும்அழைத்துப்பேசினார்கள்.

இருந்தாலும் எதிர்க்கட்சிகளை சேர்ந்தவர்கள் பொதுத் தடை பெற்றதன் காரணமாக தேர்தலை நடத்த முடியவில்லையே தவிர இந்த அரசோ, அமைச்சர்களோ தேர்தலை நிறுத்தவில்லை.

தன்னிறைவு திட்டம் முதல்வர் புரட்சித்தலைவரின் சீரிய முயற்சியில் கிராம ராஜ்யம் நல்ல முறையில் செயல்பட வேண்டும் என்ற எண்ணத்தில் நடைபெறுகிறது. தன்னிறைவு திட்டத்தை பேரூராட்சிகளுக்கும் நகராட்சிகளுக்கும் கொண்டு வந்திருப்பது பாராட்டுக்குரியது.

அதைப்போன்று இந்தியாவிலே எந்த மாநிலத்திலும் இல்லாத ஒருகொள்கையை உள்ளாட்சித் தேர்தலில் தமிழ்நாட்டில் கொண்டுவர இந்த அரசு திட்டமிட்டு அறிவித்தது. அந்தவகையில் தேர்தல் நடைபெற்றிருந்தால் இன்றைக்கு எல்லா மாநிலங்களும் நம்மைப் பாராட்டியிருப்பார்கள். ஆனால் தேர்தலை நிறுத்த பொதுத் தடை வாங்கியிருக்கிறார்கள். இப்போது தடை வாங்கிவிட்டாலும் தமிழகத்தில் இன்னும் 2 அல்லது 3 மாதத்தில் தேர்தலை நடத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு ஆற்காடு சேதுராமன் கூறினார்.

---

## பின் தங்கியோர் பட்டியல்

சென்னை, பிப். 21—பின் தங்கியோர் அரசு பட்டியலில் குற்ற மரபினர் பட்டியலிலிருந்து நீக்கப்பட்ட 70 இனத்தவரையும். கன்னியாகுமரி மாவட்டம், திருநெல்வேலிமாவட்டத்திலுள்ள செங்கோட்டை வட்டத்தில் 21 வகுப்பினரையும் சேர்த்து மொத்தம் 213 வகுப்பினர்கள் பிற்பட்ட வகுப்பினர் என்று அறிவிக்கப்பட்டுள்ளது என நிதியமைச்சர் நாவலர் சட்டசபையில் கேள்வி நேரத்தின்போது தெரிவித்தார்.

---

## யானைகள் ஓட்டப் பந்தயம்

திருச்சூர், பிப். 21—யானைகள் கண்காட்சி மற்றும் ஓட்டப் பந்தயம் திருச்சூரில் நடந்தது. ஆயிரக்கணக்கான மக்கள் கூடி நின்று இந்த ஓட்டப் பந்தயத்தை பார்த்து மகிழ்ந்தனர்.

59 யானைகள் இந்த ஓட்டப் பந்தயத்தில்பங்கு கொண்டன. இவை 3 பிரிவாக பிரிக்கப்பட்டு ஓட்டப் பந்தயம் நடந்தது, கோபிநாத் என்ற அழகான யானை சிறந்த யானையாகதேர்ந்தெடுக்கப்பட்டு அதற்கு கஜராஜா பட்டம் வழங்கப்பட்டது. குருவாயூர் தேவஸ்தானத்துக்குச் சொந்தமான லட்சுமி என்ற பெண் யானைக்கு கஜராணி என்ற பட்டம் வழங்கப்பட்டது.

மாநகராட்சி ஸ்டேடியத்தில் இந்த யானைகள் ஓட்டப்பந்தயம் நடந்தது ஓட்டப்பந்தயத்தில் வெற்றி பெற்ற யானைகள் பஞ்ச வாத்தியங்கள் முழங்க ஊர்வலமாக தெக்கின் காட்மைதானத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டன.

சாலையின் இருபுறங்களிலும் ஏராளமான மக்கள் கூடி நின்று இந்த யானைகளின் அணிவகுப்பினை கண்டு மகிழ்ந்தனர்.

---

மத்தியப்பிரதேச

## நிர்வாண நடனத்திற்கு மத்திய அரசு அனுமதி

போபால், பிப். 21—மத்தியப் பிரதேசத்தில் நடைபெறும் வருடாந்திர "கஜ்ராஹோ" நடனத்திற்கு மத்திய அரசு அனுமதி வழங்கியுள்ளது.

கஜ்ராஹோ நடனம் என்பது ஒருவகை நிர்வாண நடனம் ஆகும். இதற்கு மத்திய அரசு முதலில் அனுமதி வழங்க மறுத்தது.

ஆனால் மத்தியப் பிரதேச அரசு இதை பலமாக வற்புறுத்தியது. சுற்றுலாப் பயணிகளைக் கவரக்கூடியது என்று கோரியது.

மத்திய அரசு இதுபற்றி ஒரு உயர்மட்டக் குழு மூலம் ஆராய்ந்து இறுதியில் அனுமதி வழங்கியது.

---

இன்று மாலை

## வானொலியில் அமைச்சர் அண்டே பேசுகிறார்

சென்னை, பிப். 21—சென்னை வானொலியில் 'வளரும் தமிழகம்' என்ற தலைப்பில் மக்கள் நல்வாழ்வுத் திட்டங்கள் குறித்து இன்று மாலை 6.15 மணிக்கு மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சர் டாக்டர் அண்டே பேசுகிறார்.

---

மேடை சரிந்து

## புதுவை அமைச்சர் காயம்

கடலூர், பிப். 21—கடலூரிலுள்ள முத்தமிழ் இலக்கிய மன்றத்தின்சார்பில் பாரதிவிழா கொண்டாடப்பட்டது. இதில் புதுவை அமைச்சர் சவுரிராசன் கலந்து கொண்டார். சவுரிராசன் மேடையிலிருக்கும்போது மேடை சரிந்து விழுந்தது. இதனால் சவுரிராசனுக்கு லேசான காயம் ஏற்பட்டது. சிகிச்சைக்குப்பின் அவர் தொடர்ந்து விழாநிகழ்ச்சிகளில்கலந்து கொண்டார்.

---

## லியாகத்-அலிகான் நிகழ்ச்சிகள்

பிப்ரவரி 24,25 வக்ஃபு போர்டு நிர்வாகக் கூட்டம்.

25 மாலை சென்னை பொருளதாரமன்றவிழா.

27- காலை கோவையில் வக்ஃபு விசாரணை மாலை சேலத்தில் வக்ஃபு விசாரணை

28- சென்னை

மார்ச் 1- குளித்தலை கூட்டம்

---

## ஆதி திராவிடருக்கு இடம் ஒதுக்கியதை எதிர்த்த தி. மு. க.

டாக்டர் சமரசம் குற்றச்சாட்டு

**சென்னை, பிப். 21--பஞ்சாயத்து தேர்தலில் ஆதிதிராவிடர்களுக்கு இடம் ஒதுக்கப்பட்டிருந்தது. ஆனால் தி. மு. க. வினர் வழக்கு போட்டதால் பஞ்சாயத்து தேர்தலுக்கு தடை விதிக்கப்பட்டுவிட்டது என்று டாக்டர் சமரசம் கூறினார்.**

தமிழ்நாடு 1982ஆம் ஆண்டு ஊராட்சிகள் திருத்த மசோதா, தனி அதிகாரிகள் நியமித்தல் திருத்த மசோதா, ஊராட்சி ஒன்றியக் குழுக்கள் தனி அதிகாரிகள் நியமித்தல் திருத்த மசோதா ஆகிய 3 மசோதாக்கள் மீதும் சட்டப்பேரவையில் விவாதம்நடந்தது.

விவாதத்தில் கலந்து கொண்டு டாக்டர் சமரசம் பேசுகையில் கூறியதாவது:—

ஆதி திராவிடர்களும், தாய்மார்களும் ஆட்சிப் பொறுப்பில்அங்கம்வகிக்க வேண்டும் என்ற சீரிய நோக்குடன் அவர்களுக்கு கழக அரசு இட ஒதுக்கீடு செய்துள்ளது, காந்தியடிகள் கனவை புரட்சித்தலைவர் நனவாக்கி வருகிறார்.

அரசு கொண்டு வந்திருக்கும் தன்னிறைவுத் திட்டம்மற்றமாநிலங்களுக்கெல்லாம் முன்னோடியாகத்திகழ்கிறது.

எப்படியோ பஞ்சாயத்துத் தேர்தல்களை ஒத்திவைக்கும் நிலை ஏற்பட்டுவிட்டது.

கர்நாடகத்திலும், ஆந்திர மாநிலத்திலும் உள்ளாட்சித் தேர்தலை ஒத்திவைத்துள்ளனர்.

ஆனால்தமிழகத்திலோ அரசின் நல்ல நோக்கத்தை பாழடித்து பஞ்சாயத்து தேர்தல்களை நிறுத்திவிடஎதிர்க்கட்சிகள் முயன்று விட்டன.

இவ்வாறு டாக்டர் சமரசம் பேசினார்.

---

## ஆலடி அருணா நிகழ்ச்சிகள்

ஆலடிஅருணா நிகழ்ச்சிகள் விவரம் வருமாறு:—

22ந் தேதி—சாத்தூர்
23 - அருப்புக் கோட்டை
24 - திருச்செந்தூர்
25 - திருமங்கலம்
26 - மதுரை
27 - தஞ்சை

---

## திருமணம்

இடைப்பாடி நியூஸ் ஏஜண்ட் கே. குருசாமியின் மகன் கே.பாலமுருகனுக்கும், வெள்ளாண்டிவலசு என்.ஏ.அருணாசலத்தின் மகள் ஏ.ராஜராஜேஸ்வரிக்கும் இம்மாதம் 26ந் தேதி (வெள்ளிக்கிழமை)காலை 6 மணிக்கு இடைப்பாடி க. புதூரிலுள்ள மணமகன் இல்லத்தில் திருமணம் நடைபெறுகிறது.

---

## தாழ்த்தப்பட்ட மக்களுக்குபாதுகாப்பு தர அரசு நடவடிக்கை

அமைச்சர் பொன்னையன் தகவல்

**சென்னை, பிப். 21- தாழ்த்தப்பட்ட மக்களுக்குப் பாதுகாப்புத்தர அரசு நடவடிக்கைகளை எடுத்து வருகிறது என்று சட்டசபையில் அமைச்சர் பொன்னையன் கூறினார்.**

ஆதிதிராவிடர்கள் மீதான கொடுமைகளை விசாரிக்க தனிக்கோர்ட்டுகள் அமைப்பது குறித்து கழகஉறுப்பினர்தாமரைக்கனி சட்டப்பேரவையில் கேள்வி ஒன்றை எழுப்பினார்.

அதற்குப் பதிலளித்துப் பேசிய சட்ட,கூட்டுறவுத்துறை அமைச்சர் பொன்னையன் கூறியதாவது;

தாழ்த்தப்பட்ட மக்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளிலிருந்து அவர்களை காப்பாற்றும் நடவடிக்கைகளை அரசு மேற்கொண்டிருக்கிறது. பெண்களை கற்பழிப்பது மிகவும் கொடூரமானது. கற்பழிப்பு குற்றங்கள் செய்பவர்களுக்கு தூக்கு தண்டனை விதிக்கவேண்டும் என்று மாநில அரசு மத்திய அரசை வலியுறுத்தி இருக்கிறது.

குடியியல் உரிமைகள் பாதுகாப்பு சட்டத்தின் கீழ் பல்வேறு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன. 1979ஆம் ஆண்டில் போடப்பட்ட695 வழக்குகளில் 485 வழக்குகள் மூலம் தாழ்த்தப்பட்டவர்களுக்கு பரிகாரம்செய்யப்பட்டுள்ளது. இதுவரை கிட்டத்தட்ட 7ஆயிரத்து 500 வழக்குகளில் பரிகாரம் தேடப்பட்டிருக்கிறது.

### சிறப்பு நீதிமன்றங்கள்

1955 ஆம் ஆண்டு குடியியல் உரிமைகள் பாதுகாப்பு சட்டத்தின் கீழ் தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடி வகுப்பினர்கள் பாதிக்கப்பட்டுள்ள வழக்குகளை விசாரிக்க திருச்சிராப்பள்ளி, மதுரை, திருநெல்வேலி, கும்பகோணம் ஆகிய இடங்களில் முறையே நான்கு குற்றவியல் முதல் வகுப்பு மாஜிஸ்திரேட் சிறப்பு நீதிமன்றங்கள் அமைக்க அரசு உத்தரவு பிறப்பித்துள்ளது.

இந்த சிறப்பு நீதிமன்றங்களில் சரியான வழக்கறிஞர்களையும் அரசு நியமிக்கும். தாழ்த்தப்பட்டவர்களின் மீது அக்கறையில்லாத வழக்கறிஞர்கள் நியமிக்கப்படாமல் அரசு பார்த்துக் கொள்ளும்.

-தீண்டாமை என்ற உணர்வு பல்லாண்டு காலமாக இருந்து வருகிறது. கடுமையான நடவடிக்கைகள் எடுப்பதன் மூலம் தான் இதை ஒழிக்க முடியும்.

இவ்வாறு அமைச்சர் பொன்னையன் கூறினார்.

### முத்திரைத் தாளில் தமிழ்

தமிழகத்தில் பயன்படுத்தப்படும் முத்திரை கட்டணத் தாளில் ஆங்கிலமும் இந்தியும் இருப்பது குறித்து எழுப்பப்பட்ட மற்றொரு கேள்விக்கு பதில் அளித்த அமைச்சர்பொன்னையன் முத்திரைத் தாளில் தமிழ் இடம் பெறுவது குறித்து ஆராய்ந்து அனுப்பும்படி நாசிக்கில் உள்ளமத்திய முத்திரைத்தாள்நிலையத்தின் முதுநிலைப் பொது மேலாளரிடம் கேட்கப்பட்டுள்ளது என்று கூறினார். இந்தியா பூராவும் முத்திரை கட்டணதாளில் ஆங்கிலமும் இந்தியும் தான் இருக்கிறது. நகல் கட்டண பத்திரங்களில் ஆங்கிலமும். தமிழும் இருக்க வேண்டும் என்று மாநில அரசு மத்திய அரசை வற்புறுத்தியுள்ளது. வேலைப்பளு குறைவாக இருக்க வேண்டும் என்பதனால்தான் முத்திரைக் கட்டணம் பணமாகவே பெற்றுக் கொள்ளாமல் முத்திரைதாள் திட்டம் அமுலில் இருந்து வருகிறது.

இவ்வாறு அமைச்சர் பொன்னையன்கூறினார்.

---



---

## கிழக்கு தஞ்சை மாவட்ட

# புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். மன்றங்களின் செயல்வீரர் கூட்டம்

கிழக்கு தஞ்சை மாவட்ட புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். மன்றங்களின் செயல்வீரர் கூட்டம் வருகின்ற 25—2—82-ம் தேதி வியாழக்கிழமை காலை 10-00 மணிக்கு தஞ்சைமாவட்ட எம்.ஜி.ஆர் மன்ற மாநாட்டு வரவேற்புக்குழு அமைப்பது சம்பந்தமாக பதிவு பெற்ற எம். ஜி. ஆர். மன்றங்களுடைய நிர்வாகிகள் கூட்டம் அனைத்துலக எம்.ஜி.ஆர். மன்றத் தலைவர் திரு. பி. முசிறிப் புத்தன் எம். எல். ஏ. அவர்கள் தலைமையில் தஞ்சை மாவட்டம், திருத்துறைப்பூண்டியில் நடைபெறுகிறது.

மன்ற பொதுச் செயலாளர் திரு. ஆர். சௌந்தரராசன் எம். எல். ஏ. அவர்களும், கழக கொள்கை பரப்புச் செயலாளர் திரு. இரா. மணிமாறன் எம். எல். ஏ. அவர்களும் கலந்து கொள்கிறார்கள்.

பதிவு பெற்ற மன்ற நிர்வாகிகள் தங்களுடைய பதிவுச் சான்றிதழ்களுடன் இந்த கூட்டத்தில் கலந்து கொள்ள வேண்டுமாய் கேட்டுக் கொள்கிறேன்.

**என். விஜயபாலன் எம்.எல்.ஏ.**
செயலாளர்
கிழக்கு தஞ்சை மாவட்ட எம்.ஜி.ஆர். மன்றம்

நாள்: 20—2—82

## மேற்கு தஞ்சை மாவட்ட

# புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். மன்றங்களின் செயல்வீரர் கூட்டம்

மேற்கு தஞ்சை மாவட்ட புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர், மன்றங்களின் செயல்வீரர் கூட்டம் வருகின்ற 24—2—82-ம் தேதி புதன் கிழமை மாலை 5-00 மணிக்கு, தஞ்சை மாவட்ட எம். ஜி. ஆர். மன்ற மாநாட்டு வரவேற்புக்குழு அமைப்பது சம்பந்தமாக பதிவு பெற்ற எம். ஜி, ஆர். மன்றங்களின் கூட்டம் அனைத்துலக எம்.ஜி.ஆர். மன்றத் தலைவர் திரு. பி. முசிறிப்புத்தன், எம். எல். ஏ., அவர்கள் தலைமையில் தஞ்சாவூர் பெத்தண்ணன் கலையரங்கில் நடைபெறுகிறது.

மன்றப் பொதுச்செயலாளர் திரு. ஆர். சௌந்திரராசன், எம்.எல்.ஏ., அவர்களும் கழககொள்கை பரப்புச் செயலாளர் திரு. இரா. மணிமாறன், எம்.எல்.ஏ., அவர்களும் கலந்து கொள்கிறார்கள்.

பதிவு பெற்ற மன்ற நிர்வாகிகள் தங்களுடைய பதிவுச் சான்றிதழ்களுடன் இந்த கூட்டத்தில் கலந்துகொள்ள வேண்டுமாய் கேட்டுக் கொள்கிறோம்.

**வீ.ஆர்.கே.பழனியப்பன்** தலைவர் — **அய்யம்பேட்டை அஜீஸ்** செயலாளர்
மேற்கு தஞ்சை மாவட்ட எம்.ஜி.ஆர். மன்றம்
20—2—82

## புரட்சித்தலைவர் எம்.ஜி.ஆர். மன்றங்களின் மாநாடு

# ஏப்ரல் 24, 25 கும்பகோணம்

அனைத்துலக எம். ஜி. ஆர். மன்ற மாநாடு ஏப்ரல் மாதம் 24, 25 ஆகிய தேதிகளில் தஞ்சை மாவட்டம், கும்பகோணத்தில் நடைபெறுகிறது.

மாண்புமிகு தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். அவர்களும் - கழகத் தலைவர்களும் கலந்து கொள்கிறார்கள்.

மாநாட்டினை சிறப்பாக நடத்த தஞ்சை மாவட்ட எம்.ஜி.ஆர். மன்றங்களின் நிர்வாகிகளும் கழக நிர்வாகிகளும் பங்கு பெறும் "ஆலோசனைக் கூட்டம்" வருகின்ற பிப்ரவரி 24-ம் தேதி புதன்கிழமை மாலை 5-00 மணிக்கு தஞ்சாவூர் பெத்தண்ணன் கலையரங்கிலும், 25-ம் தேதி வியாழக் கிழமை காலை 10-00 மணிக்கு தஞ்சை மாவட்டம் திருத்துறைப்பூண்டி பிரகந்நாயகி தியேட்டரிலும் அனைத்துலக எம்.ஜி.ஆர். மன்றத் தலைவர் திரு. பி. முசிறிப்புத்தன் எம்.எல்,ஏ. அவர்கள் தலைமையில் கிழக்கு - மேற்கு தஞ்சை மாவட்டக் கழக - மன்ற செயல் வீரர்கள் கூட்டம் நடைபெறுகிறது.

**தலைமை மன்றம்**
**அனைத்துலக எம். ஜி. ஆர் மன்றம்**

சென்னை—14
20—2—82

சென்னையில்

# ஆதி ஆந்திரர்கட்கு வீட்டு மனைப்பட்டா

சென்னை, பிப். 21— சட்டபேரவையில் கழக உறுப்பினர் சமரசம் ஆதி ஆந்திரர்களுக்கு வீட்டு மனை வழங்குவது பற்றி கேட்ட கேள்விக்கு அமைச்சர் எஸ். டி. எஸ். பதிலளிக்கையில் கூறியதாவது;-

ஆதி ஆந்திரர்கள் பெரும் பாலானவர்கள் சென்னையிலேயே உள்ளார்கள்.

மாவட்டங்களில் சிறிய அளவிலேயே அவர்கள் உள்ளார்கள். சென்னை நகரில் உள்ள ஆதி ஆந்திரர்களுக்கு வீட்டு மனைப்பட்டா அளிப்பதில் கழக அரசு தீவிரமாக இருக்கிறது. ஏற்கனவே 900க்கும் அதிகமான வீட்டுமனைப் பட்டாக்களை அரசு வழங்கியுள்ளது. மேலும் 840பேருக்குவீட்டுமனைப் பட்டா கொடுக்க அரசு நடவடிக்கை எடுத்துள்ளது.

இவ்வாறு அமைச்சர் எஸ்.டி.எஸ். கூறினார்.

# நியதிக்கு உட்பட்டு எழுத்தாளர்கள் எழுதுவதே நலன் தரும்

## அமைச்சர் ஆர். எம். வீ. பேச்சு

**சென்னை, பிப். 21- நியதிக்கு உட்பட்டு எழுத்தாளர்கள் எழுதுவதே சமுதாயத்துக்குப் பலன் தருவதாக அமையும் என்று அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.**

சென்னையிலுள்ளஎல். வி. ராமையா நன்கொடையின் சார்பில் தெலுங்கு எழுத்தாளர்களைக் கௌரவிக்கும் விழா சென்னையில்நடைபெற்றது, இதில் கலந்து கொண்டு செய்தி அறநிலையத்துறை அமைச்சர் ஆர். எம். வீ. பேசுகையில் கூறியதாவது;—

பத்திரிகையாளர்கள் குழுமியுள்ள இந்நல்விழாவில் தமிழக அரசின் செய்தித்துறை அமைச்சர் என்ற முறையில் சில கோரிக்கைகளை வைக்க கடமைப்பட்டுள்ளேன்.

சுதந்திரம் என்ற பெயரில் எதை வேண்டுமானாலும், எப்படி வேண்டுமானாலும் எழுதலாம் என்ற போக்கு சமீப காலத்தில் அதிகமாகக் காணப்படுகிறது. இது கண்டிக்கத்தக்கது. எண்ணத்தை வெளியிடும் உரிமையில் கருத்து வேறுபாடில்லை. அப்படி எண்ணியதை எப்படிச்சொல்வது என்பதில் தான் பிரச்சினையே தோன்றுகிறது.

எழுத்தாளர்களும் பேச்சாளர்களும் தாங்கள் சிந்திப்பதை எழுதவோ அல்லது பேசவோ உரிமை வேண்டும். அவர்கள் எந்த நியதிக்குள்ளாவது தங்களைக் கட்டுபடுத்திக் கொண்டுஎழுதவேண்டும்.

பத்திரிகைகளின் பணி மகத்தான பணி. நம்நாட்டில் 60 சதவிகிதத்திற்கு மேல்கல்வியறிவு இல்லாதவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் கல்வி அறிவு பெறவும், எழுச்சி பெறவும் பத்திரிகைகள் தங்களை ஈடுபடுத்திக் கொள்ளவேண்டும்.

இந்த விழா நாயகர் சாதாரணநிலையிலிருந்து இன்று தன்னுடைய கடின உழைப்பாலும், நெறியான வாழ்க்கையாலும் உயர் நிலையை எய்தியுள்ளார்.

### வழிகாட்டி

அவரைப் போன்றே குறைந்த கல்வியறிவும் சாதாரண குடும்பத்தில் தோன்றிய என் போன்றோர் உயர் நிலையை அடையஎன்னுடையகடின உழைப்பும், நெறியான வாழ்வுமே காரணம்.

எனக்கு கடின உழைப்பையும்நெறியான வாழ்வையும் கற்றுக் கொடுத்த பெரியார், அண்ணா, புரட்சித் தலைவர் ஆகியோரை இத்தருணத்தில் எண்ணிப் பூரிப்படைகிறேன். நெறியான வாழ்வும் கடின உழைப்புமே மனிதனை நல்வழிப்படுத்தும்.

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ. பேசினார்.

## மத்திய அரசு சட்டத்தை

# ஆதரிக்கும் தி. மு. க. தமிழக சட்டத்தை எதிர்ப்பது ஏன்?

## நாஞ்சில் வின்சென்ட் கேள்வி

**சென்னை, பிப். 21- மத்திய அரசு கொண்டு வந்த சட்டத்தை தி.மு.க. ஆதரிக்கிறது. அதே போன்ற சட்டத்தை தமிழகஅரசு கொண்டு வரும்போது எதிர்ப்பது ஏன் என்று சட்டசபையில் நாஞ்சில் வின்சென்ட் கூறினார்.**

கள்ளச்சாராயம்காய்ச்சுபவர்கள், மருந்து பொருள் சட்டத்தின் கீழ் குற்றம் செய்பவர்கள், குண்டர்கள் விபசாரக் குற்றம் செய்பவர்கள், சட்ட விரோதமாகப் பிறரது நிலத்தில் குடிசை போடுபவர்களின் அபாயகரமான செயல்களைத் தடுக்கும் சட்ட மசோதா சட்டப் பேரவையில் நிறைவேறியது.

முன்னதாக இந்த மசோதா மீதான விவாதத்தில் கலந்து கொண்டு பேசிய கழக உறுப்பினர் நாஞ்சில் வின்சென்ட் கூறியதாவது:

இந்திய அரசு கொண்டு வந்த தேசிய பாதுகாப்புச் சட்டத்திற்கு தி.மு.க. ஆதரவு தெரிவித்துள்ளது.

### தி. மு. க. இரட்டை வேடம்

ஆனால் மாநில அரசு கொண்டுவந்திருக்கும் தடுப்புக்காவல் சட்டத்திற்கு அது எதிர்ப்பு தெரிவிக்கிறது. மத்திய அரசு கொண்டு வந்தால் ஆதரிப்பது தமிழக அரசு கொண்டு வந்தால் எதிர்ப்பதா? கள்ள சாராயம் காங்கிரஸ் தி.மு.க. ஆட்சியிலே கூட இருந்தது. 1958-ம் ஆண்டு முதலே கள்ளச் சாராயத்தை ஒழிக்கஅரசு விரும்பியது. ஆனால் முடியவில்லை. இதன் காரணம் கடுமையான சட்டம் இல்லாததுதான். நடவடிக்கை எடுக்கும் போது தி.மு.க.வினர் வாடிக்கையாகவேஎதிர்த்து வருகிறார்கள்.

விஷப்பொருட்களை உபயோகித்து கள்ளச் சாராயம் காய்ச்சி மக்களை சாகடிப்பவர்களை தண்டிக்க சட்டம் கொண்டு வரப்பட வேண்டாமா? பெங்களூரில் நடந்ததைப் போல் தமிழகத்தில் நடக்காமல் இருக்கவே இந்த சட்டம்.

கல்லூரிப் பெண்கள் பஸ் நிலையத்தில் நின்று கொண்டிருக்கும் போதே அவர்களை கடத்திச் சென்று விபசாரத்தில் ஈடுபடுத்துவோருக்கு கடும் தண்டனை வழங்க வேண்டும்.

குண்டர்களையும்,அத்துமீறி நிலத்தில் ஆக்ரமித்து குடிசை போடுகிறவர்களையும் தடுத்து நிறுத்துவதற்கு கடுமையான சட்டம் தேவை.

அந்த வகையில் இந்த தடுப்புக்காவல்சட்டத்தை கொண்டுவந்திருக்கும் அரசை நான் பாராட்டுகிறேன்.

இவ்வாறு நாஞ்சில் வின்சென்ட் பேசினார்.

## படித்த இளைஞர்கள்

# சுய வேலை வாய்ப்பு பெற கூட்டுறவுசங்கம்

**சென்னை, பிப். 21- படித்த இளைஞர்கள் சுயவேலை வாய்ப்பு பெறும் நோக்கத்தில் கூட்டுறவு அமைப்பு ஒன்று அமைக்கப்பட்டுள்ளது என்று அமைச்சர் பொன்னையன் சட்டசபையில் கூறினார்.**

தமிழ்நாட்டில் படித்த இளைஞர்களின் சுயவேலை வாய்ப்புக்காக தனி கூட்டுறவு அமைப்பு அமைக்கப்பட்டுள்ளது.

சென்னையிலுள்ள படித்த சுயவேலை வாய்ப்புள்ள இளைஞர்களின் சங்கம், அதன் சங்கத்திலுள்ள உறுப்பினர்களுக்காக சுயவேலைவாய்ப்பு பெற வசதிகள் செய்யும் நோக்கத்துடன் ஒரு கூட்டுறவு அமைப்பினைநிறுவ முன்மொழிவுகள் அனுப்பியிருந்தது இதைப் பரிசீலித்து சென்னை நகரை விவகார எல்லையாகக் கொண்டு ஒரு கூட்டுறவு அமைப்பினை "NABSY Co-operative Thrift and Credit Society Limited" என்ற பெயரில் இயங்க அனுமதி வழங்கப்பட்டு, சங்கம் 22—10—81அன்று பதிவு செய்யப்பட்டு 9—11—81 அன்று கூட்டுறவு மற்றும் சட்டத் துறை அமைச்சரால் துவக்கி வைக்கப்பட்டுள்ளது.

கடந்த 5 மாத காலத்தில் இந்த அமைப்புக்கு 412 ஆயிரம் ரூபாய் கடனுதவி அளிக்கப்பட்டது. இது வெற்றிகரமாக உள்ளது. அனைத்து மாவட்டங்களுக்கும் விரிவாக்கப்படும்.

இவ்வாறு அமைச்சர் பொன்னையன்கூறினார்.

நாடாளுமன்றத்தில்
சபாநாயகர் அறிவிப்பு

# எம். பிக்கள் கடிதங்களை சென்சார் செய்ய மத்திய அரசுக்கு அதிகாரம்உண்டு

புதுடெல்லி, பிப். 21— எம். பிக்களுக்கு வரும் கடிதங்களை சென்சார் செய்ய அரசுக்கு அதிகாரமுண்டுஎன்றுநாடாளுமன்ற சபாநாயகர் பலராம் ஜாக்கர் அறிவித்தார்.

தபால் ஆபீஸ் 1898-ம் ஆண்டு சட்டப்படி இந்த அதிகாரம் அரசுக்கு இருக்கிறது.

ஆகவே அதற்கு மாறுபட்ட ஒரு தீர்ப்பை இப்போது அளிக்க இயலாது என்று பலராம் ஜாக்கர் கூறினார்'

டாக்டர் சுப்பிரமணிய சுவாமி கொடுத்திருந்த ஒருஉரிமைப்பிரச்னையை ஒட்டி இந்தப் பிரச்னை நாடாளுமன்றத்தில் வந்தது.

கா. கா. தே. கா.
எம். எல். ஏ.

# தீர்த்தாராமன் இ. காங்கிரசில் சேர்ந்தார்

சென்னை, பிப். 21— காந்தி காமராஜ் தேசிய காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த டி. தீர்த்தாராமன் எம். எல். ஏ. அந்தக் கட்சியிலிருந்து விலகி இந்திரா காங்கிரசில் சேர்ந்தார்.

சட்டமன்ற உறுப்பினராகவும், கா.கா.தே.கா. கட்சியின் பொதுச்செயலாளராகவும் இருந்த அவர் அந்தக் கட்சியிலிருந்து விலகினார். இந்திரா காங்கிரசில் உறுப்பினராக சேர விரும்பி மனு அனுப்பியுள்ளார்.

தமிழ்நாடு சட்டசபையில் தனக்கு தனி இடம் ஒதுக்குமாறு சபாநாயகரை கேட்டுக் கொள்ளப் போவதாகவும் இ.காங்கிரசில் சேர்த்துக் கொள்ளப்படும் வரை சுயேச்சை உறுப்பினராக இருக்கப் போவதாகவும் அவர் நிருபர்களிடம் கூறினார்.

காமராஜர் காட்டிய வழியில் இருந்து கா.கா.தே.கா. விலகிச் சென்று விட்டதாகவும் அதை திருத்தி சரிப்படுத்த தான் எடுத்துக் கொண்ட முயற்சிகள் பலனளிக்கவில்லை என்றும் எனவே அந்தக் கட்சியிலிருந்து விலகிவிட்டதாகவும் கூறினார்.

தீர்த்தாராமனின் ராஜினாமா விளைவாக 235 உறுப்பினர்களைக் கொண்ட தமிழ்நாடு சட்டசபையில் காந்தி காமராஜ் தேசிய காங்கிரஸ் கட்சியின் பலம் 4 ஆகக் குறைந்துவிட்டது. இந்திரா காங்கிரசின் பலம் 31 ஆக உயருகிறது.

தீர்த்தாராமன் அனுப்பியுள்ள மனு கட்சியின் மேலிடத்துக்கு அனுப்பி வைக்கப்படும் என்றும், அவரை சேர்த்துக் கொள்வதில் சிரமம் எதுவும் இருக்காது என்றும் தமிழ்நாடு இந்திரா காங்கிரஸ் தலைவர் எம்.பி. சுப்பிரமணியம் கூறினார்.

பேச்சாளர் முகவரி
**கல்லை கதிரவன்**
ஈஸ்வரன் கோயில் தெரு,
எலவானாசூர் கோட்டை
உளுந்தூர் பேட்டை
(வட்டம்)
—607202

# ஜேப்பியார் குழந்தைகட்கு முதல்வர் பெயர் சூட்டினார்

சென்னை, பிப். 21— சென்னை மாவட்ட கழக செயலாளர் ஜேப்பியார் எம்.எல்.சி.யின்துணைவியாருக்கு சென்ற ஆண்டு இதே நாளில் 2 பெண் குழந்தைகள் பிறந்தன, நேற்று 2-வது பிறந்த தினத்தையொட்டி முதல்வர் புரட்சித் தலைவர் இல்லத்துக்கு ஜேப்பியாரும் அவர் துணைவியாரும் குழந்தைகளுடன் சென்றனர். ஒரே பிரசவத்தில் பிறந்த 2 குழந்தைகளில் மூத்த குழந்தைக்கு அன்பு நிலா என்றும் 2வது குழந்தைக்குத் தங்கநிலா என்றும் முதல்வர் புரட்சித் தலைவர் பெயர் சூட்டினார்.

## முதலாண்டு நினைவு நாள்

சென்ற ஆண்டு இதே நாளில் எங்களை விட்டுப் பிரிந்த எங்கள் அன்புத் தெய்வம் பொ. பாப்பாத்தி அம்மாள் அவர்களின் நினைவைப் போற்றி வணங்குகிறோம்.

**அ.பொன்னையா நாடார்,**
வீரமாணிக்கம்,
திருச்செந்தூர்தாலுகா

மகன்கள்

அ. பொ. திருமேனிநாதன்
அ. பொ. லட்சுமணன்
அ. பொ. நாராயணன்
அ. பொ. ராமதாஸ்



கீழ்க்கண்ட நீதிபதிகள் முன்னிலையில் 20-2-82 அன்று மாடர்ன் லாட்ஜ், பாண்டிச்சேரியில் நடைபெற்ற 54வது குலுக்கல் முடிவுகள்;-

நீதிபதிகள்:.

1. திரு. சந்திரசேகரன் அசிஸ்டெண்ட் எக்ஸ். இன்ஜினியர் எலக்ட்ரிகல் டிபார்ட்மெண்ட், பாண்டிச்சேரி.
2. திரு.ஜி.சுப்பிரமணியன், சீனியர் அக்கவுண்ட்ஸ் ஆபீசர் டைரக்டரேட் ஆப் ஹெல்த் அண்டு ஃபேமிலி வெல்பேர் சென்டர், பாண்டிச்சேரி.
3. பி. கோபால கிருஷ்ணன், மேனேஜிங் பார்ட்னர், சிவா பேப்பர் இண்டஸ்டரி, பாண்டிச்சேரி.

முதல் பரிசு (1)
ரூ. 1,00,000
பி.ஒய் 120565
(சென்னை)

ஆறுதல் பரிசு (2)
ரூ. 1000 (தலா)
பி.எக்ஸ் 120565
பி.இசட் 120565

2-வது பரிசு (3)
ரூ. 10,000 தலா
பி. எக்ஸ் 235595 (டெல்லி)
பி.ஒய் 115762 (திருச்சி)
பி.இசட் 188321 (அகமதாபாத்)

3-வது பரிசு (90)
ரூ. 1000 தலா

கீழ்க்கண்ட 5 இலக்கங்களில் முடியும் எல்லா சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

| | |
|---|---|
| 80752 | 60816 |
| 35239 | 89306 |
| 28309 | 60911 |
| 40100 | 29497 |
| 41716 | 85937 |

4-வது பரிசு (900)
ரூ. 100. தலா

கீழ்க்கண்ட நான்கு இலக்கங்களில் முடியும் எல்லா சீட்டுகளுக்கும்பரிசு உண்டு.

| | | |
|---|---|---|
| 5300 | 5063 | 6423 |
| 6319 | 8947 | 7347 |
| 9546 | 7177 | 1061 |
| 3529 | | |

5வது பரிசு (1800)
ரூ. 50 தலா

கீழ்க்கண்ட 4 இலக்கங்களில் முடியும் எல்லா சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

| | | |
|---|---|---|
| 9008 | 3422 | 4845 |
| 6903 | 4786 | 5904 |
| 9503 | 6968 | 6444 |
| 0467 | 6090 | 5208 |
| 8984 | 4516 | 8345 |
| 6706 | 3967 | 8978 |
| 5023 | 8275 | |

6வது பரிசு (1800)
ரூ. 20 தலா

கீழ்க்கண்ட 4 இலக்கங்களில் முடியும் எல்லா சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

| | | |
|---|---|---|
| 2492 | 2890 | 0921 |
| 7786 | 1138 | 8662 |
| 7880 | 2881 | 4428 |
| 8573 | 6020 | 9023 |
| 7561 | 6061 | 4551 |
| 0753 | 1072 | 5202 |
| 9002 | 6260 | |

7வது பரிசு (4500)
ரூ. 10 தலா

கீழ்க்கண்ட 3 இலக்கங்களில் முடியும் எல்லா சீட்டுக்களுக்கும் பரிசு உண்டு.

837 597 103 745 171

குறிப்பு:- 3,4,5,6,7வது பரிசு பெற்றவர்கள் அவர்கள் டிக்கெட்டுகள் வாங்கிய உள்ளூர் ஏஜெண்டுகளை அணுகி அவர்களிடமிருந்து கிளைம் பார்ம்களைப் பெற்று அவற்றை நிரப்பி ஏஜெண்டுகளிடம் இருந்து பரிசுத் தொகையைப் பெற்றுக் கொள்ளலாம். முதல் பரிசு மற்றும் இரண்டாவது பரிசு பெற்ற டிக்கெட்டை வைத்திருப்பவர்கள் முதல் வகுப்பு நீதிபதி அவர்களால் ஒப்புதல் செய்யப்பட்ட பாஸ்போர்ட் சைஸ் போட்டோவுடன் மெஸர்ஸ் டெக்கான் ஏஜென்சியின் சென்னை அலுவலகத்தில் நேரடித் தொடர்பு கொண்டு பெற்றுக்கொள்ளலாம். இருந்த போதிலும் அவர்கள் பரிசுத் தொகையை ஒருதேசியமயமாக்கப்பட்ட வங்கி மூலம் பெற விரும்பினால் அவர்கள் ஏதாவது ஒரு உள்ளூர் ஏஜெண்ட்டிடம் இருந்து கிளைம்பார்மை பெற்று அதனைப் பூர்த்தி செய்து பரிசுத் தொகையை கேட்கலாம்.

டிரஷர்
சேரிடபிள்
எண்டோவ்மெண்ட்ஸ்
பாண்டிச்சேரி

சோல் ஏஜெண்ட்ஸ்:- மெஸர்ஸ்டெக்கான் ஏஜென்சி
தலைமை அலுவலகம்:- 242/1, திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை, சென்னை-5
கிளைஅலுவலகம்:- 30, திருமுடிநகர் பாண்டிச்சேரி-605 001 போன்: 2272

எமது அடுத்த குலுக்கல் (மாதாந்திர பம்பர் குலுக்கல்) 21—2—82 அன்று நடைபெறும்.